REGD No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 6 பக்கம் விலை 35 காசு










மலர் 4 சென்னை 1—10—1980 புதன் —:(*):— வெளியூர் 2—10—1980 வியாழன் இதழ் 323

# ஈரான் நாட்டில் ஈராக் நாட்டு தளபதி

## பிடித்த பகுதிகளை பத்திரிகையாளர்களுடன் சுற்றிப்பார்த்தார்

# சரணடையும் நிலையில் ஈரான்

## போரைநிறுத்த கோமேனி மறுப்பு

**லண்டன், அக். 1-கடந்த 10 நாட்களாக ஈரான்-ஈராக் நாடுகளுக்கிடையே நடந்துவரும் யுத்தத்தில் ஈரான் நாடு சரணடைய வேண்டிய சூழ்நிலையில் உள்ளது.**

ஈரான் நாட்டில், ஈராக் நாடு பல பெரும் நகரங்கள் உட்பட பல பகுதிகளை பிடித்துள்ளது அல்லவா? அப்பகுதிகளில், ஈராக் நாட்டுத் தளபதி பத்திரிகை நிருபர்களுடன் சுற்றிப் பார்த்தார்.

ஈரான்ஈராக்நாடுகளுக்கு இடையே கடந்த 10நாட்களாக கடும்யுத்தம்நடந்து வருவது தெரிந்ததே.

யுத்தத்தின் தொடக்க கட்டத்தில் இருந்தேஈராக் நாடு முன்னணியில்இருந்து வருகிறது.

ஈரான் நாட்டின்எண்ணை சேமிப்பு கிடங்குகள் நிறைந்த பகுதியான அபதான், மற்றும் குர்ஸ்தான் பிராந்தியத்தில், 4 முக்கிய நகரங்களையும் ஈராக் கைப்பற்றியது.

ஈரான் நாட்டுத்தலை நகரான டெஹ்ரான்மீதும் ஈராக் நாட்டு போர் விமானங்கள் குண்டு வீசித் தாக்கி வருகின்றன.

அதோடு சத்-அல்-அராப் நீர் வழிப்பாதை நெடுக நூற்றுக்கணக்கான மைல் நெடுக யுத்தம் நடந்து வருகிறது.

### பிடித்த பகுதியில்...

ஈரான் நாட்டில் ஈராக் நாடு கைப்பற்றியுள்ள பகுதிகளில் ஈராக் நாட்டு தளபதிகளில் ஒருவர் சுற்றிப்பார்த்தார்.

அந்தத் தளபதி தன்னுடன் பத்திரிகை நிருபர்களையும் கூட்டிச்சென்று ஈரான்நாட்டில் ஈராக் நாட்டுக் கொடிகள் பறப்பதைச் சுட்டிக்காட்டினர்.

### ஈரான் பிடிவாதம்

480 சதுர மைல் பரப்பளவைஇழந்துவிட்ட நிலையிலும் யுத்தம் இன்னும் சில நாட்கள் நீடித்தால் சரணடைய வேண்டிய சூழ்நிலை இருந்தபோதிலும் ஈரான் நாட்டு அதிபரான அயதுல்லா கோமேனி யுத்தத்தை நிறுத்த முடியாது என பிடிவாதம் பிடித்து வருகிறர்.

### ஜியா பேட்டி

ஈராக்-ஈரான் நாடுகளுக்கு இடையே சமரசம் செய்து வைக்கும் முயற்சியில் ஈடுபட்டு, இரு நாட்டு தலைவர்களையும் சந்தித்து "பேச்சு வார்த்தை நடத்திய பாகிஸ்தான் ஜனதிபதி ஜியா-வுல்-ஹக், பாரிசில் நிருபர்களுக்கு பேட்டி அளித்தார்.

இரு நாடுகளும் தற்போதைக்கு யுத்தத்தை நிறுத்தாது என்றே தோன்றுவதாக ஜியா கூறினர்.

பிரான்ஸ் நாட்டுதலைவர்களுடன் யுத்த நிலவரம் குறித்து பேச்சுவார்த்தை நடத்திய பிறகு, ஜியா அமெரிக்கா செல்லுகிறர்.

கடைசியாக கிடைத்த தகவலின்படி. ஈரான் நாட்டில், கோராம்ஷார் பகுதியில் உள்ள ஈரானின் எண்ணை சுத்திகரிப்பு ஆலையை குறிவைத்து ஈராக் நாட்டுப் படைகள் கடும் தாக்குதல் நடத்தி வருகிறது.

### அண்ணல் புகழ் வாழ்க!



மக்களுக்காகத் தோன்றிய தலைவரே!
எப்படி வாழ வேண்டும் என்பதற்கு உதாரணமாக விளங்கிய மகாத்மாவே!
உயிரை அழிக்கும் ஆயுதங்களை விட உணர்வுகளால் எதிரிகளை விரட்டிட இயலுமென அன்பால், அகிம்சையால் கத்தியின்றி, இரத்தமின்றி விடுதலை வாங்கித்தந்த அண்ணலே!
உன்புகழ் போற்றுகின்றேம்!

### அறிவிப்பு

காந்தி பிறந்த நாளை முன்னிட்டு, நாளை அண்ணா அலுவலகத்துக்கு விடுமுறை. அடுத்த இதழ் நாளை மறுநாள் வழக்கம் போல் வெளிவரும்.

## காலம் செய்யும் ஜால வித்தை!

பேரன்புடையீர்,

நேற்று நான் திருவண்ணமலையிலிருந்து சென்னை வந்து கொண்டிருந்தேன், மணி பனிரெண்டைத் தாண்டி சிறிது நேரம் ஆயிற்று.மீனம்பாக்கம் விமான நிலையத்தைத் தாண்டிக்கொண்டிருந்தது நான் வந்த கார். ஏராளமான காங்கிரஸ் கட்சித் தொண்டர்கள் விமான நிலையம் நோக்கி விரைந்துகொண்டிருந்தனர். வேக வேகமாக கார்கள் சென்னையிலிருந்து வந்த வண்ணம் இருந்தன. அவைகளுக்கிடையிலே தி.மு.க. தலைவரின் கார் மாலை சூடிக்கொண்டு வழக்கம் போல சில கார்கள் பின் தொடர வந்துகொண்டிருந்தது, விமானநிலையம் நோக்கி வேகமாகச் சென்றன!

ஒரு விநாடி, பாழும் நெஞ்சில் வேல் பாய்வது போன்ற உணர்ச்சி.

**யாரை வரவேற்க இவர் போகிறர் என்று எண்ணினேன். சிரிப்பை அடக்கமுடியவில்லை!**

**யாரை விரட்ட கருப்புக்கொடியோடு விமான நிலையம் வா என்று தன் தொண்டர்களை அழைத்தாரோ அதே விமான நிலையம் நோக்கி அன்று வந்த அதே அம்மையாரை வரவேற்க மாலையும் கையுமாகத் தன் தொண்டர்களோடு போகிறர் என்ற நினைவு வந்தது சிரித்து விட்டேன்!**

காலம் செய்யும் ஜாலவித்தை!

அரசியலில் அவ்வப்போது எழும் புயல் காற்றுல் எதிர்பார்க்க முடியாத மாற்றங்கள் தோன்றும் போலும்!

புயல் புகுந்தால் மரங்கள் வேரோடு சாயும்! ஆனுல் அரசியல் புயல் சில மனிதர்களின் குணங்களையே அடியோடு மாற்றுகிறது!

என்னதான் புயலின் வேகமிருந்தாலும் மாமரத்தில் தேங்காய் காய்க்காது!

ஆனுல் சில மனிதர்களின் போக்கையே மாற்றி 'முள்' என்று சொன்னதையே 'மலர்' என்று சொல்வதும் 'அரக்கி' என்று வர்ணித்தவர்களை 'அன்னை' யென்று கூறுவதும், விரட்டியடித்த கை வரவேற்கப் போவதும் சாதாரண மாற்றங்களா? பாம்பின் பல்லில் உள்ள நஞ்சு மாறி, அமுதாகும் என்பது நம்பக்கூடியதல்ல. ஆனுல் சில மனிதர்களின் போக்கைப் பார்க்கையில் எப்போது எது நடக்கும் என்றே சொல்ல முடியாது போலும்!




அரசியல் ஆதாயம் பெற 'எப்படியும் நடப்பது' என்ற முடிவிற்கு வந்துவிட்டவர்கள் மீது உள்ளபடியே கோபம் வரவில்லை! ஆனுல் அனுதாபப்படாமல் இருக்க முடியவில்லை!

'மாநில சுயாட்சி' கொள்கையை மறந்துவிட்டவர்கள்-இந்தி எதிர்ப்பு உணர்ச்சியின் அடிப்படையையே மாற்றிவிட்டவர்கள்-தன்மான உணர்ச்சியைத் தாரைவார்த்து விட்டவர்கள் - இவர்களைக் காணும்போது நண்பர்களே நெஞ்சு வலிக்கிறது!

பதவி சுகத்திற்காக அன்றி வேறெதற்காக இப்படி அலைகிறர்கள்?

சிந்திக்கமாட்டார்கள்! நிந்திக்கத் தவறமாட்டார்கள்!

அவர்கள் இழுத்த இழுப்பிற்கு வருபவர்கள்தான் தியாகிகள்!

காரணம் கேட்பவர்கள் துரோகிகள்!

தீனன்- பாபு! இந்தப் பெயர்கள் மறந்து போயிருக்கும்! தீனன் நினைவு மன்றம்! என்று ஒரு கீத்துக்கொட்டகை. அதுவும் காற்று சற்று வேகமாக அடித்தால்

(3-ம் பக்கம் பார்க்க)



சென்னை விமான நிலையத்தில் பிரதமர் இந்திராகாந்தியும் முதல்வர் புரட்சித் தலைவரும் பேசிக்கொண்டிருந்த போது எடுத்த படம்.

### வள்ளலைப் பற்றி வள்ளல்

# தமிழிசையை வளர்த்த அண்ணமலை அரசர்: புரட்சித்தலைவர் பாராட்டு

**சென்னை, அக். 1 - தமிழிசை இந்த அளவுக்குச் சிறந்து விளங்குவதற்கு அண்ணமலை அரசர்தான் காரணம் என்று தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் கூறினர்,**

வள்ளல் அண்ணமலை அரசரின் நூற்ருண்டு விழாவினை ஒட்டி அவரதுநினைவு தபால்தலை நேற்று வெளியிடப்பட்டது.

மத்திய தபால்துறை அமைச்சர் ஸ்டீபன் வெளியிட முதல்வர் புரட்சித் தலைவர் முதல் அஞ்சல்தலையைப் பெற்றுக்கொண்டார்.

அண்ணமலை அரசரின் நூற்ருண்டு விழாவினையொட்டி நேற்று நடந்த மூன்ரும் நாள் விழாவிற்கு ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி தலைமை வகித்தார்.

மத்திய வேளாண்மைத் துறை துணை அமைச்சர் ஆர்.வி.சாமிநாதன் அண்ணமலை பல்கலைக் கழக துணைவேந்தர் பி.எஸ். சோமசுந்தரம் ஆகியோரும் விழாவில் பேசினர்கள்.

விழா துவக்கத்தில் எம்.ஏ. எம். ராமசாமி வரவேற்புரை நிகழ்த்தினர். விழா இறுதியில் வைத்தி சுப்பிரமணி அய்யர் நன்றி கூறினர்.

அதன் பிறகு இசைப் பேரறிஞர் எம். எஸ். சுப்புலட்சுமியின் இன்னிசை நடைபெற்றது.

சுப்புலட்சுமிக்கு பொன்னடைபோர்த்தப்பட்டது. சங்கராச்சாரியாரின் திருஉருவப்படத்தை எம்.எஸ். சிடம் முதல்வர் புரட்சித் தலைவர் வழங்கினர்.

சிலப்பதிகாரம். திருக்குறள் பேச்சு-கட்டுரைப் போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவ மாணவிகளுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் பரிசுகளை வழங்கினர். ராஜா சர் அண்ணமலைச் செட்டியார் நினைவு சுழற்கோப்பையை சட்டக் கல்லூரி பெற்றது.

விழாவில் முதல்வர்புரட்சித்தலைவர் பேசியதாவது:

செட்டிநாட்டு அரசர் என்று புகழ் பெற்ற- 'சர்' பட்டம்பெற்ற ராவ்பகதூர் பட்டத்துக்குச் சொந்தக்காரர் ஆக்கிக் கொண்ட அண்ணமலையாரின் நூற்ருண்டு விழா நடைபெறுகிறது.

இந்த நேரத்தில் அவரது நினைவு அஞ்சல் தலை வெளியிடும் நிகழ்ச்சியில் அந்த தபால் தலையைப் பெற எனக்கு வாய்ப்புகொடுத்ததற்கு நன்றி கூறக் கடமைபட்டு இருக்கிறேன்.

அண்ணமலையார் தனக்

(2-ம் பக்கம் பார்க்க)

### நினைவாஞ்சலி!

எளிமையே
கல்விக்கண்
திறந்த ஏழைகளின்
இதயமே!
தொண்டால்
உயர்ந்த
தூயதலைவரே!
கர்மவீரரே!
கண்ணீரால்
நினைவாஞ்சலி
செலுத்துகின்றேம்!

## புரட்சித்தலைவர் நிகழ்ச்சிகள்

**2-10-80**

காலை: திருச்சியில் மாஸ்கோ ஒலிம்பிக் நிகழ்ச்சியில் வெற்றி பெற்ற ஹாக்கி வீரர்களுக்கு பாராட்டு விழா.
இடம்: டெரிடோரியல் ராணுவ அணிவகுப்பு மைதானம்.
117-வது பிரதேச ராணுவ படைப்பிரிவைப்பார்வையிடுதல்.

மாலை: திருவள்ளுவர் போக்குவரத்து கழகத்தின் கூண்டு கட்டும் பணிமனை திறப்பு விழா.
இடம்: திருச்சி மண்டலத் தொழில் பட்டறை.

மாலை: காவலர் வீட்டுவசதிக்கழகத் துவக்க விழா
இடம்: அண்ணா விளையாட்டு அரங்கம்.

**3-10-80**

காலை: திருச்சி, சமயபுரம் புதிய பேருந்து நிலையத் துவக்க விழா (வேலைவாய்ப்பு உறுதி திட்டத்தின்கீழ் சாலை போடுதல்,நிலப்பட்டா வழங்குதல் போன்ற நிகழ்ச்சிகள் உள்பட)

துறையூர், அரசினர் பெண்கள் உயர்நிலைப் பள்ளி கட்டிடத்திற்கு அடிக்கல்நாட்டு விழா, (தன்னிறைவுத் திட்டத்தின் கீழ் பள்ளிக் கட்டிடங்கள் நிலப்பட்டா வழங்குதல் நிகழ்ச்சி உள்பட)

மாலை: பேரறிஞர் அண்ணா பிறந்த நாள்விழா (திருச்சிமாவட்ட நூலக ஆணைக்குழு கட்டிடம் மற்றும் அறிவியல் மையத்தைத் திறந்து வைத்தல், நிலப்பட்டா வழங்குதல் உள்பட)

# குடிநீர்க்குழாய்களை நாசமாக்கி திமுகவினர் வெறியாட்டம்

ஆற்காடு, அக். 1 ஆற்காடு தொகுதி திமிரி ஒன்றியம், பின்னத்தாங்கல் கிராம கழக அமைப்பாளர் பி. தனராஜ், தனது சொந்த செலவில், ரூ. 7 ஆயிரத்தில் கிராம மக்களுக்கு குடிநீர் வசதி செய்துதந்தார்.

பொது மக்கள் வசதிக்காக கழக அமைப்பாளர் குடிநீர் வசதி செய்து தந்தார் என்ற ஆத்திரத்தில் திமுக வெறியர்கள் அந்த குடிநீர்க் குழாய்களைப் பிடுங்கி எறிந்து வெறியாட்டம் ஆடினர்.

இதனால் பின்னத்தாங்கல் கிராம மக்கள் குடிநீர் கிடைக்காமல் அவதிப்பட்டனர்.

நடந்த சம்பவம் குறித்து தொகுதி கழக எம்.எல்.ஏ. சேதுராமன் அமைச்சர் இராகவானந்தத்திடம் புகார் செய்தார்.

தொகுதிக்கு வருகை தந்த அமைச்சர் உடனடியாக நடவடிக்கை எடுத்து மக்களுக்கு குடிநீர் வசதி செய்து தரும்படி அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார்.

இந்த நிலையில் பொய்யையே செய்தியாக்கி குழப்பம் செய்வதையே தொழிலாகக் கொண்டுள்ள 'முரசொலி' ஏடு கடந்த 29-ஆம் தேதிஇதழில் உண்மைக்குப் புறம்பாகத் திரித்து செய்தி வெளியிட்டு தி. மு. க. வினரின் வெறியாட்டத்தை மறைக்க முயற்சி செய்துள்ளது.

நடந்ததும், அமைச்சர் உடனடி நடவடிக்கை எடுத்து குடிநீர் கிடைக்க உத்தரவிட்டதும் அந்தப் பகுதி மக்களுக்கு நன்றாகத் தெரியும் என்று கூறி சட்டப் பேரவை கழக உறுப்பினர் ஏ. எம். சேதுராமன், பொய் செய்தி வெளியிட்டுள் முரசொலிக்கு கடும் கண்டனம் தெரிவித்துள்ளார்.

# திருப்பூர் மணிமாறன் வெளிநாடு பயணம்

சென்னை அக். 1. அரசு தலைமை கொறடாவும் கழக கொள்கைபரப்பு செயலாளருமான திருப்பூர் மணிமாறன் இன்று (1ந்தேதி) இரவு 11 மணிக்கு புரட்சித் தலைவரின் ஆசியுடன் விமானம் மூலம் வெளிநாடுகளுக்கு பயணம் மேற்கொள்கிறார். கீழ்த்திசை நாடுகளாகிய சிங்கப்பூர், பினாங், ஹாங்காங், தாய்லாந்து, பாங்காக் மற்றும் மலேசிய நாடுகளுக்கு செல்கிறார். தனது சுற்றுப்பயணத்தை முடித்துக் கொண்டு இம்மாதம் 20-ம் தேதி தாயகம் திரும்புகிறார்.





## அமைச்சரவை கூட்டம்

சென்னை, அக். 1- தமிழக அமைச்சரவைக் கூட்டம் முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் அரசு தலைமைச் செயலகத்தில் இன்று நடந்தது.

## முத்துசாமி நிகழ்ச்சிகள்

அக்டோபர் 1 புதன் இரவு 10-05 மலைக்கோட்டை துரித வண்டி மூலம் திருச்சி புறப்படுதல் அக்டோபர் 2 காலை 6-55 திருச்சி சேர்தல்.

2-3 முதல்வர் புரட்சித் தலைவர் நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளுதல்.

3 (வெள்ளி) இரவு 10-50 பாண்டியன் துரித வண்டி மூலம் சென்னை புறப்படுதல்.

4- காலை 6-35 சென்னை சேர்தல்.

## லெனின் சதுக்கத்தில் ஜனாதிபதி

மாஸ்கோ, அக். 1 மாஸ்கோ சென்றுள்ள இந்திய குடியரசுத் தலைவர் நீலம் சஞ்சீவ ரெட்டி முதல் நிகழ்ச்சியாக லெனின் சதுக்கம் சென்று மலர் வளையம் வைத்து நேற்று அஞ்சலி செலுத்தினார்.

மூடுபனி சூழ்ந்திருந்த நேரத்திலும் திரளான மக்கள் குடியரசுத் தலைவரை வரவேற்க அங்கு கூடியிருந்தனர்.

தனது துணைவியாருடனும் இந்தியத் தூதுவர் குஜ்ராலுடனும் குடியரசுத் தலைவர் லெனின் சதுக்கம் சென்றார்.



# புரட்சித்தலைவர் பாராட்டு

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

காக வாழாமல் தனது செயலால் பிறருக்காக வாழ்ந்தார்.

அவரது பெருமை இந்த அஞ்சல்தலை வெளியிடுவதன் மூலம் உலகிற்கு செய்தியாகத் தருகிறது.

இங்கே நான் வரும்போது ஒரு மகிழ்ச்சியான செய்தியைக் கேள்விப்பட்டேன்.

இந்த விழாவில் யாருமே அரசியல் பற்றி பேசவில்லை என்றுசொன்னார்கள் அண்ணாமலையாரின் புகழையும் பெருமையைப் பற்றி மட்டுமே பேசினார்கள் என்றார்கள்.

இதையும் கூட அந்த போர்க்களத்திற்கு பயன்படுத்த நினைப்பவர்கள் இருக்கலாம்,

ஆனால் ஒரு பெரியவர் நல்லவர்- நல்வழி காட்டியவரைப் பாராட்டி அனைவரும் பேசியதற்கு நன்றி கூறக் கடமைப்பட்டு இருக்கிறேன்.

## தமிழ் வளர்த்த நகரத்தார்

நகரத்தார் என்ற பிரிவைச்சேர்ந்தவர்கள் தமிழை எப்படி வளர்த்தார்கள் தமிழுக்கு எப்படித்தங்களை அர்ப்பணித்துக் கொண்டார்கள் என்பதை வரலாறு தெரிந்தவர்கள் மறக்க முடியாது.

அண்ணாமலையாருக்கு அரசர் பட்டத்தை யார் கொடுத்தார்கள் என்று சிலர் கேட்கலாம்.

அரசர் என்றால் ஒரு நாட்டுக்கு ஆட்சித்தலைவர் என்று கற்பனை செய்து பார்க்கக்கூடாது.

நடனமாடும் நடராஜரைக்கூட அரசர் என்று இலக்கியங்களும், பாடல்களும் கூறுகின்றன.

கலையில் வல்லவர்கள், இலக்கியத்தில் தகுதி படைத்தவர்களை நாட்டுக்குத் தொண்டாற்றுபவர்களை. அரசர்கள் என்று போற்றுவது வழக்கம்.

இந்த நூற்றாண்டு விழா அண்ணாமலையாரது புகழ்- பெருமை- மக்கள் உள்ளத்தில் எழும் பிரவாகமாகக் காண்கிறது. மக்கள் உள்ளத்தில் இடம் பெற்றவர் என்பதைக்காட்டுகிறது.

## அரசருக்கு புகழ்மாலை

தொண்டு-தோழமை-உறவு- ஏழைமக்களுக்கு செய்ய வேண்டிய கடமைகளைச் செய்வது என்பதற்கு எடுத்துக்காட்டாக இருக்கிறார்.

இங்கே ஆளுநரும் மற்றவர்களும் பேசிக் கொண்டிருந்தபோது என்உள்ளத்தில் ஒருநிகழ்ச்சிநினைவுக்கு வந்தது. அதனை இங்கே வெளியிட என் உணர்வு உந்துகிறது.

சிலபல ஆண்டுகளுக்கு முன்பு தஞ்சையில் புயல் அடித்து பலத்த சேதம் ஏற்பட்டது. அதில் பலர் பலியானார்கள்.

## கலைஞர்கள் நடத்திய நிவாரணப்பணி

அப்படிப் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஏதாவது நிவாரணம் அளிக்க முற்பட்டோம்.

நான் நடிகனாக இருந்த நேரத்தில் கலைத்துறை நண்பர்களோடு நிதி வசூல் செய்ய வீதிவீதியாகப் போனோம்.

பணம், துணி, என்று வசூல் செய்தோம். பிச்சை எடுப்பது போல வசூல் செய்தோம்.

அதைச் செய்ய முற்படுமுன்பு எங்களால் ஆன தொகையை அளித்து விட்டுத்தான் பிறகு மக்களிடம் சென்றோம்.

நிதிவசூலுக்கு நாங்கள் பல இடங்களுக்குச் சென்றோம்.

சிவாஜிகணேசன், ஜெமினி கணேசன், முத்துராமன், பத்மினி, சவுக்கார்ஜானகி, சாவித்திரி இன்னும் பல நடிகர் நடிகையர் சென்றோம்.

ஒரு பெரிய மாளிகையை தேர்ந்து எடுத்து அங்கு சென்றோம்.

பெரிய மாளிகை விசாலமான கதவுகள். நிறைய நிதி கிடைக்கும் என்ற நம்பிக்கையோடு அங்கு சென்றோம்.

படத்தயாரிப்பாளர் ஏ. எல். எஸ். போன்றவர்களும் எங்களுடன் இருந்தனர்.

உள் படிக்கட்டு அருகே கையேந்தி நின்றோம் எங்களுக்காக அல்ல பாதிக்கப்பட்ட மக்களுக்காக.

20 நிமிடம் கழித்து ஒருவர் வெளியே வந்தார். நெற்றியில் விபூதி, மலர்ந்த முகம் இனிய வார்த்தை வெளிப்படுத்தக்கூடிய நிலை. எங்களை வரவேற்று என்ன என்று கேட்டார்.

லட்சக்கணக்கான மக்கள் புயலால் பாதிக்கப்பட்டு இருக்கிறார்கள். அவர்களுக்கு உதவ உங்களால் ஆனதைத் தரவேண்டும் என்று கேட்டோம்.

செட்டியாரிடம் சொல்லி விட்டு பதில் சொல்வதாக உள்ளே போனார்.

பிறகு வெளியே வந்து இன்னொரு முறை வர முடியுமா என்று கேட்டார். நேரத்தைச் சொன்னால் வருகிறோம் என்றோம்.

முகவரியைக் கொடுத்து விட்டுப் போங்கள்என்றார். நாங்கள் எங்களது தனித் தனியான முகவரியைக் கொடுக்காமல் - அது சரியாக இராது என்று கருதி பிலிம் வர்த்தகசபை முகவரியைத் தரட்டுமா என்று கேட்டோம்.

அப்போது உள்ளே இருந்துசப்தம்வந்ததுஉள்ளே ஓடினார். திரும்பிவந்து 'உங்களை எல்லாம் பார்க்க பரிதாபகரமாக இருக்கிறது. வருத்தப்படாதீர்கள். எங்கள் நிலைக்கு இதைத் தருகிறோம் என்று ஒரு கவரை எங்களிடம் கொடுத்தார். அதில் பத்து ரூபாய் இருந்தது.

குடிசைப்பகுதி மக்களிடம் சென்றால் கூட அந்த மக்கள் ஆயிரக்கணக்கில் உதவ முன் வருவார்கள்.

## பெரிய மாளிகை சிறிய உள்ளம்

இவ்வளவு பெரிய மாளிகை. விசாலமான கதவுகள், ஆனால் உள்ளம் விசாலம் இல்லை.

அவரும்நகரத்தார் தான். அண்ணாமலை அரசரும் நகரத்தார்தான். இந்தஅண்ணாமலையாருக்கு நூற்றாண்டு விழா நடைபெறுகிறது.

மக்களின் மனமாளிகையில் இடம் பெற்று இருக்கிறார். ஆனால் நான் குறிப்பிட்ட அவரோ எங்கோ இருக்கிறார்.

ஆனால் அண்ணாமலையார் கொடுக்கும் வள்ளலாக- கல்வியைக் கொடுக்கும் பெரிய உள்ளத்திற்குச் சொந்தக்காரராக இருந்தார்.

அப்படிப்பட்டவரது அஞ்சல்தலை வெளியிடப்படுகிறது.

தமிழகத்தைச் சேர்ந்த எத்தனை பேர்களுடைய அஞ்சல் தலை வெளியிடப்பட்டுள்ளது என்ற விவரத்தை மத்திய அமைச்சர் இங்கே வெளியிட்டார்.

அமரர் பேரறிஞர் அண்ணாவின் அஞ்சல் தலை வெளியிடப்பட்டது. அவர் ஒரு மாநிலத்தின் தலை எழுத்தை மாற்றி அமைத்தவர்.

ஆனால் ஒரு தனியாரான அண்ணாமலையாரது அஞ்சல் தலை இன்று வெளியிடப்படுகிறது.

## தமிழ் தந்த பெருமை

தமிழ் தான் அந்தப் பெருமையை அவருக்கு அளித்துள்ளது. தமிழ் மொழி - தமிழ் இசை வளர்ச்சிக்குப் பாடுபட்டார்.

இன்னும் ஆயிரம் ஆண்டுகள் ஆனாலும் இந்த வரலாற்றுப் புகழ் நிலைத்து இருக்கும்.

தமிழ் வளர வேண்டும்- தமிழ் இசை வளர வேண்டும்- தமிழ் விஞ்ஞானம் வளர வேண்டும்-அறிவியல் வளர வேண்டும் என்று அண்ணாமலையார் பாடுபட்டார்.

அவர் இதுபற்றி சிந்திக்காமல் இருந்தால், நமக்கேன் வம்பு என்று இருந்து இருந்தால் அதே பல்கலைக்கழகத்திற்கு ஒரு தண்டபாணிதேசிகர் இசைப் பேராசிரியராக ஆகிஇருக்க முடியுமா?

எங்கோ இருந்த தமிழ் இசையை இருக்க வேண்டிய இடத்திற்கு உயர்த்தியவர் அண்ணாமலையார்.

எதிர்ப்புகள், ஏச்சுப் பேச்சு இழிவுபற்றிக்கவலைப் படாமல் தமிழிசை பரப்ப முன்வந்தார்.

அப்படிப்பட்ட அண்ணாமலையாரைப் பாராட்ட தமிழில் வார்த்தைகளைத் தேடுவதில் வறியநிலையில் நான் இருக்கிறேன். பாராட்ட வார்த்தைகள் கிடைக்கவில்லை. அவரது முயற்சியால் தமிழிசை உயர்ந்தது.

கொஞ்சம் பணம் இருந்தாலே ஆட்சி-அதிகாரிகள் எதிர்ப்புகண்டு பயம்வரும். ஆனால் பணம் போனால் போகிறது, வழக்கு வந்தால் வரட்டும், புகழ் போனால் போகட்டும் என்றுதமிழிசையைவளர்த்தார்.

## துணிச்சல்

இந்த மண்டபத்தில் தமிழில் தான் பாட வேண்டும் என்று சொல்லும் துணிச்சலைப் பெற்று இருந்தார்.

அந்த அரசர் பெயரால் இருக்கும் பல்கலைக்கழகம் இன்னும் சீரும் சிறப்பும் பெற இளைஞர்கள் ஒத்துழைக்க வேண்டும்,

நாவலர் மதியழகன் போன்றவர்கள் அந்தப் பல்கலைக் கழகத்தில் இருந்து தான் வந்துள்ளனர். அங்கிருந்து திறமையானவர்களாக வருவது அரசர் குடும்பத்திற்கு லாபம் தேட அல்ல.

## மாணவர்களுக்கு புரட்சித்தலைவர் வேண்டுகோள்

ஆகவே இந்த சந்தர்ப்பத்தில் என்னுடைய வேண்டுகோள் இதுதான்.

என்ன குறை இருந்தாலும் அதை எப்படி பேசித் தீர்த்துக் கொள்ள முடியுமோ - அத்தகைய தமிழ்பண்பாட்டுடன் நாகரிகத்துடன் தீர்த்துக் கொள்ள மாணவர்கள் முன்வரவேண்டும்.

ஆகவே தவறான பாதையில் செல்லாதீர்கள் என்று கேட்டுக் கொள்கிறேன். -தமிழ் உயர்வை-பண்பாட்டை பாதுகாருங்கள்.

இன்னும் எவ்வளவோ கிளைகள் அங்கே துவங்க வேண்டும். அரசுஉதவியையும் இதற்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

## முத்தையாவுக்கு வாழ்த்து

இங்கே ராஜாசர் முத்தையா செட்டியார் இருக்கிறார். அவரது மகனும் இருக்கிறார்.

முத்தையா செட்டியார் இந்தப் பணிகளைத்தொடர நீண்டகாலம் நலத்தோடு வாழவேண்டும்.

அரசர் அண்ணாமலை யார் பெற்ற புகழ் போல முத்தையாவும் பெற பணியாற்ற நோயின்றி திடகாத்திரத்துடன் பல்லாண்டு வாழ்ந்து தொண்டாற்ற வேண்டும்.

இவ்வாறு முதல்வர்புரட்சித்தலைவர் கூறினார்.

அண்ணாமலைப் பல்கலைக் கழக துணைவேந்தர் பி.எஸ். சோமசுந்தரம் பேசுகையில் இந்த ஆட்சியில்தான் இதுவரை இல்லாதவகையில் கடந்த ஆண்டு ரூ. 60 லட்சம் மான்யத்தை அரசு தந்துள்ளது. இதற்காக தமிழக அரசுக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன் என்றார்.

## தென் மாநில செயலாளர்கள் மாநாடு

சென்னை, அக். 1 தென் மாநில அரசுகளின் தலைமைச் செயலாளர்கள் மாநாடு தமிழக அரசு தலைமைச் செயலகத்தில் இன்று நடந்தது. மாநாட்டை அமைச்சர் கோமதிசீனிவாசன் தொடங்கி வைத்தார். அகதிகளைக் குடியமர்த்தும் பிரச்சினை குறித்து ஆலோசிக்கப்பட்டது.

# ப. உ. ச. கடிதம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பறந்து ஓடிவிடும் நிலையில் பழையபெயர் பலகையோடு வரும் வழியில் பார்த்தேன்! அவன் உயிருக்கு அதுதான் அடையாளம்! அவன் தியாகத்திற்கு அதுதான்சின்னம்.

'மறந்துவிட்டான் ப.உ.ச. சிறையிலே வளர்த்த பூனைக்குட்டிகளுக்கு தீனன்-பாபு என்று பெயரிட்டிருந்தேனே! வளர்த்தேனே' என்று கோபமாகக் கேள்விக்கணைகள் தொடுக்கப்படும்!

ஆனால் தீனன்-பாபு குடும்பத்தார் என்ன நினைப்பார்கள்! யார் எழுதியதை, யார் பேசியதைப் படித்து விட்டுக் கேட்டுவிட்டு, யாருக்குக் கறுப்புக்கொடி காட்டப்போனார்கள்-இறந்தார்கள் துப்பாக்கி சூட்டில்! இன்று யாரை வரவேற்க யார் போகிறார்கள்? தீனன்-பாபு குடும்பம் ஒருகணம் நினைத்தால்.,...அவர்கள் இதயம் எரிமலையாகாதா?

**இந்த மாற்றத்திற்குக் காரணம் என்ன? பதவி....பதவி....பதவி! இதைத்தவிர வேறு நியாயமான காரணத்தை எடுத்து இயம்பிட முடியுமா?**

மரியாதைக்குரிய பாரதப்பிரதமர் வருகிறார்கள் என்ற சேதி கேள்விப்பட்டதும் அன்று நடந்தது எப்படி நினைவிற்கு வராமல் போகும்?

தீனன்பேரால் காட்சிதரும் நினைவு மன்றத்தைப் பார்த்தேன்! என்நெஞ்சில் பட்டதை எழுதுகிறேன்!

அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் மூன்றாவது மாநாட்டைத் துவக்கி வைத்து உரையாற்றிய பிரதமர் மரியாதைக்குரிய இந்திரா காந்தி அம்மையார் சில பொன்மொழிகளை உதிர்த்திருக்கிறார்கள்.

"ரோம்நாட்டு சக்கரவர்த்தி 'உலகத்திலேயே சிறந்தது எது?'' என்று ஒரு அறிஞரிடம் கேட்டார். அந்த அறிஞர் ''மொழிதான்'' என்று கூறினார்.

சக்கரவர்த்தி 'உலகிலேயே மோசமானதுஎது? என்று கேட்டார். ''அதுவும் மொழிதான்'' என்று அறிஞர் கூறினார்.

எனவே மொழி உயர்ந்ததா மோசமானதா என்பது அந்த மொழியை நாம் எப்படிப் பயன்படுத்துகிறோம் என்பதைப் பொறுத்துத்தான் இருக்கிறது.

இந்தப் பொன்மொழியில் நமக்குக் கருத்து மாறுபாடேயில்லை. ஆனால் நான் பெற்ற அனுபவத்தை வைத்து சிறு திருத்தம் சொல்லத் தோன்றுகிறது. தவறாக நினைக்க மாட்டார்கள் என்று நம்பிச் சொல்கிறேன்.

எப்படிப்பயன்படுத்துகிறோம் என்பதோடு எதற்கு பயன்படுத்துகிறோம்! என்பதையும் பொறுத்திருக்கிறது.

மனிதன் மனம் எவ்வளவு வேகமாக சுழல்கிறது என்பதற்கு எடுத்துக்காட்டு என் நெஞ்சில் சிலவினாடிகளில் தோன்றிய இந்தக் காட்சிகள்!

அன்புள்ள

**ப. உ. ச.**

கருணாநிதிகள் கவனிக்க:

# போராட்டத்தைத் தேடி அலையும் எதிர்க்கட்சிகள்

## பிரதமர் இந்திரா கண்டனம்

**சென்னை, அக். 1- ஆளும் கட்சிக்கு ஒத்துழைப்புத் தராமல் போராட்டங்களைத் தூண்டிவிட அலையும் எதிர்க் கட்சிகள் பற்றி இந்திரா கண்டனம் தெரிவித்தார்.**

சென்னை தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில்பெருந்தலைவர் காமராஜர் நினைவு மண்டபத்திற்கு பிரதமர் இந்திரா காந்திஅடிக்கல் நாட்டினார்.

பின்னர் பிரதமர் இந்திராகாந்தி பேசும் போது கூறியதாவது:-

மக்களின் உணர்வுகளைப் புரிந்து கொண்டு செயல் பட்டவர் காமராஜர்.

ஜாதியின் பெயரால் கலவரங்களை ஏற்படுத்திக் கொண்டிருந்தவர்கள் சமுதாயத்தின் பெயரால் கலவரங்களை உருவாக்கி வருகிறார்கள்.

மக்கள் மத்தியில் குழப்பத்தை உருவாக்கி அரசியல் லாபம்பெறுபவர்கள் இருக்கிறார்கள்.

ஜாதி வெறி சமுதாயத்திற்கு எவ்வளவு கெடுதல் என்பதை மக்களிடம் எடுத்துச்சொல்லவேண்டும்.

சிறுபான்மையோருக்கு நன்மை செய்தால் எதிர் தரப்பான பெரும்பான்மையோரிடம் சென்று தூண்டிவிடுகிறார்கள். அவர்களுக்கு நன்மை செய்தால் இரண்டு தரப்பினரையும் விட்டு விட்டு போலீசாரிடம் சென்று தூண்டிவிடுகிறார்கள். அப்படிப் பட்டவர்களை அடக்க நடவடிக்கை எடுத்து வருகிறோம்.

இத்தகைய நடவடிக்கையை எல்லா மத,மொழி பேசுகின்றவர்களும் மேற்கொள்ளவேண்டும்.

சிறுபான்மையோர் வளர்ச்சியில் அதிக கவனம் செலுத்தினால் தவிர நாடு முன்னேறாது.

நாட்டிலுள்ள அனைவரும் ஒன்றுசேர்ந்து பாடுபடவேண்டும்.

எதிர்க்கட்சியாக இருப்பவர்கள் தூண்டிவிடக் கூடாது.

எதிர்க்கட்சிகள் குறைகள் கூறுவதை நாங்கள் ஆட்சேபிக்கவில்லை. அது அவர்கள் உரிமை.

எதிர்க்கட்சிகள் விரும்புவது போல ஆட்சிநடத்துபவர்கள்தாங்கள் விரும்பியது போல செயல்பட உரிமை உண்டு.

இந்தியாவிலுள்ள ஒவ்வொரு மாநிலமும் கொடுக்கவும் வாங்கவும் வேண்டும். அப்போதுதான் நாடு முன்னேற முடியும்.



நாட்டில் கட்டுப்பாடும் ஒத்துழைப்பும் இருந்தால் தான் முன்னேற முடியும்.

சமீபத்தில் கொண்டு வரப்பட்ட இரண்டு சட்டங்களை இடதுசாரி சக்திகள் எதிர்க்கின்றன. பெரும் பாலானோர் பாராட்டுகின்றனர்.

இவ்வாறு பிரதமர் இந்திரா கூறினார்.



## அமைச்சர் எஸ். டி. எஸ். நிகழ்ச்சிகள்

அக். 1 இரவு ரயிலில் தஞ்சை பயணம் 2 காலை 10மணிதஞ்சைராமநாதன் செட்டியார் மன்ற மைதானத்தில் காந்தி ஜெயந்தி விழாவில் பங்கேற்பு மனைப்பட்டா முதியோர் உதவி, விவசாயிகளுக்கு உதவி வழங்கல் மாலை 4 மணி இளங்காடு மேல்நிலை நீர்தேக்க தொட்டி திறப்பு விழா, மாலை 5 வாட்டாக்குடி புதிய பள்ளி கட்டிட திறப்பு விழா, மாலை 6 மதுக்கூர் ராமாம்பாள்புரம் தரைமட்ட நீர்த்தேக்க தொட்டி திறப்பு விழா. தையல் எந்திரங்கள் வழங்கல்,

அகடோபர் 3ல் பட்டுக்கோட்டை வீரா தியேட்டர் திறப்புவிழா. பகல் 12 தஞ்சை விவசாய கல்லூரி துணை வேந்தருடன் கலந்துரையாடல். மாலை 6 தஞ்சைவருவாய்த் துறை அலுவலர் வரவேற்பு.

## புரட்சித்தலைவரின் நந்தவனத்திலே...

-:திருச்சி பராங்குசம்:-

பொதுவுடமைப் பூங்கா அமைக்கப் போவதாகச்
சொல்கிறார்கள்.
எருக்கஞ் செடிகளை நட்டு வைத்துக்கொண்டு
மல்லிகை மணம் பேசுகிறார்கள்
லெனின் உருவத்தை வரைந்து வைத்துக்கொள்
கிறார்கள்
உழைப்பின் உருவத்தை அழிக்க முனைகிறார்கள்
காலூன்றி கைகளால் பற்றி இரத்தத்தை வியர்வை
யாக்கி
பொன் மலையின் உச்சியை எட்டுகிறான்
தொழிலாளன்;
கைகளைக் கட்டி வாய் புதைத்து அமைதியாளன்
ஆகிறான்-
ஹெலிகாப்டரினால் உச்சியை அடைந்துவிட்ட
இன்றைய குப்பன்.
வேதனைகளைச் சொல்லாமல் இருக்கமுடிவதில்லை.
சோதனைகள் முள்ளாய் குத்திடும்போது...
கருவேப்பிலையென வீசிவிடும் நாவளவன்
அவனென்றால்
தேயத் தேய சந்தனமணம் காண்பான் எந்தன்
தலைவன்
திருச்சி- திருவரங்கம் இமாம்பஸ் மாவென்றால்
சிறப்புண்டு
சுவைத்துவிட்டு வீசி எறிந்த விதையென்றாலும்
புரட்சித்தலைவரின் நந்தவனத்திலே வீசிடும்
மாங்காற்று
சூரியன் மறையும் நேரம் சிறியோரின் நிழலும்
பெரிதாகும்
காளையும் படுத்துவிட்டால் காக்கையும்
கொத்துவதாகும்
சூரியனின் ஒளியையும் காளையின் வீரத்தையும்
மறைத்திடத்தான் முடியுமோ!

# யுத்தத்தைநிறுத்துக:ஈரான் ஈராக் நாடுகளுக்கு ரஷ்யா கோரிக்கை

மாஸ்கோ, அக். 1- ஈராக் ஈரான் நாடுகளுக்கு இடையேயான யுத்தம் தொடர்ந்து நடந்து வருகிறது.

யுத்தத்தை உடனடியாக நிறுத்தி பிரச்சினைகளை பேச்சு வார்த்தைகள் மூலம் தீர்த்துக் கொள்ளவேண்டும் என ரஷ்யா வேண்டுகோள் விடுத்துள்ளது.

ஏற்கனவே உலக நாடுகள் சபையும் யுத்தத்தை உடனடியாக நிறுத்துமாறு இரு நாடுகளையும் கேட்டுக் கொண்டு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

யுத்தத்தை நிறுத்த ஈராக் ஒப்புக் கொண்ட போதிலும் ஈரான் மறுத்து வருகிறது.

ஈராக் நாட்டிற்கு ஜோர்டான் குவைத் போன்ற நாடுகள் உதவி செய்வதாகவும் இவ்வாறு தொடர்ந்து அந்நாடுகள் உதவிசெய்தால் கடுமையான விளைவுகளைச் சந்திக்க வேண்டி வரும் என ஈரான் எச்சரித்துள்ளது.

உலகத்தமிழ் மாநாடு

# ஏற்பாடுகள் தீவிரம்: எல்லா அமைச்சர்களும் மதுரையில் முகாம்

**மதுரை, அக். 1- உலகத்தமிழ் மாநாட்டையொட்டி எல்லா தமிழக அமைச்சர்களும் மதுரையில் முகாமிட்டு மாநாட்டு ஏற்பாடுகளை நேரடியாகக் கவனிப்பார்கள் என்று அமைச்சர் ராஜாமுகமது தெரிவித்தார்.**

மதுரையில் உலகத்தமிழ் மாநாடு நடக்க இருப்பதையொட்டி அமைக்கப்பட்ட விருந்தோம்பல் குழுக்கூட்டம் மாநகராட்சிக் கட்டிடத்தில் நடைபெற்றது.

அமைச்சர்ராஜாமுகமது, மேயர் பாலகிருஷ்ணன், துணைமேயர் நவநீதகிருஷ்ணன், கலெக்டர் பூரணலிங்கம், மற்றும் குழு உறுப்பினர்கள் கலந்து கொண்டனர்.

கூட்டம் முடிந்தபின் நிருபர்களிடம் அமைச்சர் ராஜாமுகமது கூறியதாவது:-

விருந்தோம்பல் குழுவிற்கு துணைக்குழு கலெக்டர் தலைமையில் அமைக்கப்படும். அதில் டி.வி.எஸ், பாண்டியன் ஓட்டல், மதுரை கோட்ஸ் ஆகியவற்றின் பிரதிநிதிகள் ரோட்டரி, அரிமா, ஜேசிஸ் சங்கங்களின் பிரதிநிதிகள் மற்றும் தனசேகரபாண்டியன், டாக்டர் சத்தார், கவுன்சிலர் அப்சர்உசேன், முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் லட்சுமி நாராயணன், சி. தங்கம் ஆகியோர் இடம்பெறுவார்கள்.

இந்த துணைக்குழு அடிக்கடி கூடும். எல்லாக்குழுக்களிலும் பத்திரிகையாளர்கள் இரண்டுபேர் வீதம் நியமிக்கப்படுவார்கள்.

### வெளிநாட்டு அறிஞர்கள்

உலகத்தமிழ்மாநாட்டில் கலந்துகொள்ள 650 வெளிநாட்டு அறிஞர்கள் ஒப்புதல் தெரிவித்துக் கடிதம் எழுதிஉள்ளனர். இவர்கள் சோவியத் யூனியன் அமெரிக்கா, இங்கிலாந்து, மலேசியா, சிங்கப்பூர், ஜப்பான், ஸ்ரீலங்கா, ஆகிய நாடுகளைச் சேர்ந்தவர்கள்.

வெளிநாட்டு பிரதிநிதிகள் தங்குவதற்குஇடவசதியும் உணவு வசதியும் செய்து கொடுக்கப்படும்.

தமிழ்நாடு முழுவதும் இருந்து ஏறத்தாழ ஆயிரம் தமிழ் அறிஞர்கள் மாநாட்டில் கலந்து கொள்கிறார்கள். மாநாட்டில் கலந்து கொள்ளும், வெளிநாட்டு, உள்நாட்டு அறிஞர்களுக்கு காலை, மாலை, இரவில் 14 வேளைக்கு உணவு ஏற்பாடுசெய்யப்படுகிறது. முதல்வர்ஒருவேளை உணவு வழங்குகிறார்.

மாநகராட்சி, இந்து அறநிலையத்துறை, பல்கலை கழகம், பாண்டியன் போக்கு வரத்துக் கழகம், டி.வி.எஸ்., பாண்டியன் ஓட்டல் ஆகியவை ஒவ்வொன்றும் ஒரு வேளை உணவு அளிக்கின்றன.

வி. எஸ். தியாகராஜ முதலியார் ஒரு வேளை உணவுப் பொறுப்பை ஏற்கிறார்.

### நீருற்று பூங்கா

வெளிநாட்டுப் பிரதிநிதிகள் தங்கியிருக்கும் பகுதிகள் அலங்கரிக்கப்படும். நீருற்றுக்களும் பூங்காக்களும் அமைக்கப்படும். வண்டியூர்க் கண்மாய் அழகுபடுத்தப்பட்டுப் படகுகள் விடப்படும்.

### அமைச்சர்கள் முகாம்

டிசம்பர்மாதத்திலிருந்து எல்லா அமைச்சர்களும் மதுரையில் முகாமிட்டு உலகத்தமிழ் மாநாட்டு ஏற்பாடுகளைக் கவனிப்பார்கள்.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது கூறினார்.

குழுவிற்கு அமைச்சர் ராஜாமுகமது தலைவர். மதுரை கலெக்டர் பூரணலிங்கம், மேயர் எஸ்.கே. பாலகிருஷ்ணன் ஆகியோர் துணைத் தலைவர்கள்.

உறுப்பினர்களின் செயலாளராக மாநகராட்சி கமிஷனர் மலைச்சாமி இருப்பார். குழு உறுப்பினர்கள் வருமாறு: செட்டிநாட்டரசர் முத்தையா செட்டியார் டி.எஸ். ராமச்சந்திரன், பொள்ளாச்சி மகாலிங்கம், சிவந்திஆதித்தன், வக்ப் போர்டு வாரியத் தலைவர் சையத்யூசுப். ராதா தியாகராஜன், பி. எஸ். ராமசுப்பிரமணிய ராஜா, மாணிக்கவாசகம் செட்டியார், பாண்டியன் ஓட்டல் சுந்தரபாண்டியன் பட்டிவீரன்பட்டி நாகராசன், அழகுசுந்தரம்செட்டியார், அங்குவிலாஸ்அங்கமுத்துப்பிள்ளை, டாக்டர் சத்தார், துணைமேயர் நவநீத கிருஷ்ணன் மற்றும் கெங்காராம்துரை ராஜ், ராமநாதபுரம் மாவட்ட கலெக்டர் மாதவன்நாயர் ஆகியோர் உட்பட 42பேர் இருப்பர்.

## சைதை. தமிழ்ச்செல்வன் நிகழ்ச்சிகள்

அக். 5 முதல் 15வரை சென்னை, 16முதல் 18வரை கும்பகோணம் தஞ்சை மாவட்டம் 19 சென்னை 20முதல் 29வரை செங்கை மாவட்டம்

## கவிஞர் உதயகுமார் நிகழ்ச்சிகள்

அக்டோபர் 1 தலைஞாயிறு, 2- சித்தாய்மூர் 9- பாலசமுத்திரம், 10- திருச்சி மாவட்டம்.

முகவரி:
கவிஞர் த.உதயகுமார் பி.ஏ.
விட்டுக்கட்டி-அஞ்சல்
திருத்துறைப்பூண்டி- வழி
பின்: 614715.

## கோவையில் வளர்மதி கழககொடி ஏற்றினர்

கோவை, அக். 1- கோவை மாவட்டம் உடுமலை, பொள்ளாச்சி, பெரியார் மாவட்டம் ஈரோடு தொகுதிகளில் மகளிர்பிரிவு ஆலோசனைக் கூட்டத்தில் கழகமகளிர் பிரிவு அமைப்பாளர் பா. வளர்மதி கலந்துகொண்டார்.

கூட்டங்களில் பி. டி. லட்சுமி, பழனியம்மாள், மாள், விஜயா, பொன்னம் லலிதா, பாக்கியம். ராஜலட்சுமி, சரோஜினி, கமலா, ராஜம்மாள் மற்றும் ஏராளமானோர் கலந்து கொண்டனர்.

உடுமலையில் பொள்ளாச்சி ரோடில் மகளிர் அணி சார்பாக அண்ணா பிறந்தநாள் விழா கொண்டாடப்பட்டது. கழக கொடியை பா. வளர்மதி ஏற்றிவைத்தார்.

பழனி தொகுதியில் கழக மகளிர் பிரிவின் சார்பில் காவலப்பட்டி, கணக்கன்பட்டி, பாலசமுத்திரம் ஆகிய இடங்களில் பா. வளர்மதி கழகக் கொடிகளை ஏற்றி வைத்தார். ஜமுனா, மேரி, தங்கம், அய்யம்மாள் ஆகியோர் கூட்டங்களில் கலந்து கொண்டனர்.

## மறைவு

கர்நாடக மாநில 22வது வட்டம் மாகடி சாலை கழக அவைத்தலைவர் கிருஷ்ண மூர்த்தியின் துணைவியார் கஸ்தூரி அம்மாள் கடந்த 19ந்தேதி காலமானார்.

## முகவை மாவட்ட அமைப்பாளர்கள் கூட்டம்

வரும் 3-ந் தேதியன்று காலை 10 மணிக்கு மதுரை பயணியர் விடுதியில் முகவை மாவட்ட கிளைக் கழக அமைப்பாளர்கள் ஆலோசனைக் கூட்டம் நடைபெறுகிறது. மாவட்ட தொகுதி கழக நிர்வாகிகள் கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இக்கூட்டத்தில் தலைமை ஆலோசனைக் குழுவும் கலந்து கொள்கிறது. அனைவரும் தவறாது கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

பொ. அன்பழகன் எம். பி.
கே.கே.எஸ்.எஸ்.ஆர்.ராமச்சந்திரன் எம்.எல்.ஏ.,
பி தியாகராஜன்





Published by K. Ravindran on behalf of Thangamani Publications, 275, Avvai Shanmugam Salai, Madras-14 and Printed by him at Print House, 1, first Main Road, United India Colony, Madras-24.
Editor: E. PARASURAMAN

# பிரதமர் இந்திரா - முதல்வர்புரட்சிதலைவர் முக்கிய ஆலோசனை

சென்னை, அக். 1-பிரதமர் இந்திரா காந்தியும், முதல்வர் புரட்சித்தலைவரும் விமான நிலையத்தில் பேசிக்கொண்டிருந்தனர்.

நேற்று பகல் சென்னை வந்த பிரதமர் இந்திரா காந்தி பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டார். தேனும்பேட்டை நிகழ்ச்சியை 20 நிமிடங்கள் முன்னதாகவே முடிந்துவிட்டதால் விமான நிலையத்தில் பிரதமர் 15 நிமிடங்கள் ஓய்வாக அமர்ந்திருந்தார்.

பிரதமரை வழியனுப்ப ஆளுநர் பட்வாரி, முதல்வர் புரட்சித்தலைவர், அமைச்சர்கள்பண்ருட்டிராமசந்திரன், ராகவானந்தம், டாக்டர் ஹண்டே, மற்றும் இ. காங்கிரஸ் பொதுச் செயலாளர் மூப்பனார், பா. ராமச்சந்திரன் மற்றும் பலர் வந்திருந்தனர்.

## பிரதமர் அன்பு

அனைவருக்கும் குளிர்பானம் வழங்கப்பட்டது, புரட்சித்தலைவர் மட்டும் குளிர் பானம் வேண்டாம் என்று மறுத்து விட்டார். இதைப் பார்த்த பிரதமர் இந்திராகாந்தி, பணியாளை அழைத்துபுரட்சி தலைவருக்கு குளிர்பானம் வழங்குமாறு கூறினார். ஐஸ் சேர்ந்த பானம் தனக்கு ஒத்துக் கொள்ளாதுஎன்றுபுரட்சித் தலைவர் கூறினார்எனினும் "சிறிதளவு அருந்துவதால் தவறில்லை'' என்று பிரதமர் இந்திராகாந்தி கூறினார். முதல்வரும் குளிர் பானம் அருந்தினார்.

பின்னர் பிரதமரும்முதல்வர் புரட்சித்தலைவரும் சிறிது நேரம்பேசிக்கொண்டிருந்தனர்.

7-25க்கு பிரதமர் விமானப்படை விமானத்தில் டெல்லிக்கு புறப்பட்டார்.

## விமான நிலையத்தில் ஒருதமாஷ்

விமானம் புறப்பட்ட சிறிது நேரம் கழித்து தன் கட்சிக் காரர்கள் புடைசூழ, விமான நிலையத்துக்கு கருணாநிதி வந்து சேர்ந்தார்.

பிரதமர் அதற்குள் சென்று விட்டதால் மூப்பனருடன் பேசிவிட்டு கருணாநிதி திரும்பினார்.

# வெள்ளிவிழாக் காணும் இணைப்புப் பெட்டித் தொழிற்சாலை!


தூங்கும் வசதி கொண்ட குளுகுளுப் பெட்டி

**ஆசியாவிலேயே பெரியது**

அக்டோபர் 2, 1955-ல் சிறு அளவில் துவக்கப்பட்ட இத்தொழிற்சாலை, இன்று ஆசியாவிலேயே மிகப் பெரியதாகத் திகழ்கிறது. வசதி, வேகம் மற்றும் பாதுகாப்பான பிரயாணத்திற்கு ஏற்ற—70 வகைகளில்—தினசரி 2½ பெட்டிகளைத் தயாரித்தளிக்கிறது.

**வயதோ 25 தான்! தயாரித்த கோச்சுகளோ 14,200!!**




இணைப்புப் பெட்டித் தொழிற்சாலை
சென்னை-600038

**அன்னிய செலாவணியை ஈட்டித் தருகிறது**

இந்தியாவின் மாபெரும் இரயில்வே அமைப்புகளுக்கு மட்டுமின்றி, இணைப்புப் பெட்டித் தொழிற்சாலை தயாரிக்கும் கோச்சுகள் வெளிநாடுகளுக்கும் சென்றுள்ளன. பர்மா, தாய்லாந்து, தைவான், பிலிப்பைன்ஸ், வியட்நாம், ஜாம்பியா, தான்சானியா மற்றும் உகாண்டா ஆகிய நாடுகளுக்கு 359 போகிகளும் 266 கோச்சுகளும் ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளன.

**இவ்வெள்ளி விழா ஆண்டில் நைஜீரியாவிற்கு 32 கோச்சுகள் செய்தளிக்கும் ஆர்டர் கிடைத்துள்ளது!**


உகாண்டா நாட்டுக்கான கோச்





# தமிழ் நாடு கதர் கிராமத் தொழில் வாரியம்
# காந்தி செயந்தி-தீபாவளி கதர் விற்பனை துவக்க விழா
## 2-10-1980



### வேண்டுகோள்

குறைந்த மூலதன முதலீட்டில் ஏராளமானவர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கும் சிறந்த தொழில் கதர்த்தொழிலாகும். இது நாட்டின் பொருளாதாரத்தில், கூட்டுறவையும் தற்சார்பையும் வளர்க்க வகை செய்கிறது. பல்வேறு வகையான படுக்கை விரிப்புகள், துண்டுகள், திரைச்சீலைகள், வேட்டிகள், சட்டைத் துணிகள், பட்டுச் சேலைகள், முதலியவை இம்மாநிலத்தில் உள்ள கதர்-கைத்தொழில் விற்பனை நிலையங்கள் அனைத்திலும் கிடைக்கும். காந்தி பிறந்த நாள் விழாவின் போதும், தீபாவளியின் போதும் மேற்சொன்ன இத்துணிகளுக்குச் சிறப்புத் தள்ளுபடி வழங்கப்படும், எனவே, 2-10-1980ஆம் நாளிலிருந்து தொடங்கும் சிறப்புத் தள்ளுபடிக் கால அளவில் ஒவ்வொரு குடும்பமும் தனக்குத் தேவைப்படும் துணிகளில் குறைந்தது 30 சதவீத அளவிற்குரிய துணிகளையாவது கதர்த் துணிகளாக வாங்கி அதன்மூலம் கிராமக் கைவினைஞர்களுக்கு உதவுமாறு நான் வேண்டுகிறேன்.

**பிரபுதாஸ் பி. பட்வாரி**
தமிழ்நாடு ஆளுநர்



### வேண்டுகோள்

நாடு முன்னேற வேண்டுமானால் கிராமங்கள் வளர்ச்சியடைய வேண்டும். கிராமங்கள் வளர்ச்சி பெற அங்குள்ள மக்களுக்கு அவர்கள் வாழுமிடங்களுக்கருகிலேயே வேலை வாய்ப்பளிக்கப்பட வேண்டும். இதற்கு பெருமளவு உதவுவது கதர் கிராமத் தொழில்களே. காந்தியடிகளின் நல்லாசியுடன் இத்திட்டங்களை இந்த அரசு செயல்படுத்தி வருகிறது.

கிராம மக்களின் அயராத உழைப்பினால் உற்பத்தி செய்யப்பட்ட கண்கவர் வண்ணங்களில் மெல்லிய வேட்டிகள், துண்டுகள், போர்வைகள் தயாரித்த ஆடைகள், நவீன பட்டு வகைகள் கதர் அங்காடிகளில் ஏராளமாக உள்ளன. வருகின்ற காந்தி ஜெயந்தி, தீபாவளி பண்டிகை காலங்களில் மக்கள் தேவையான துணிகளை வாங்க வேண்டுமென்பதற்காக சிறப்புத் தள்ளுபடியும் அளிக்கப்பட்டிருக்கிறது. இந்த வாய்ப்பினைப் பயன்படுத்தி தங்களுக்கு வேண்டிய கதர் துணிகளை வாங்கி இத்தொழிலில் ஈடுபட்டிருக்கும் கைவினைஞர்களுக்கு சென்ற வருடத்தைக் காட்டிலும் அதிக அளவில் ஆதரவு கொடுக்க வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

**எம்.ஜி. இராமச்சந்திரன்**
முதலமைச்சர்



### வேண்டுகோள்

கிராமங்களில் அதிக வேலை வாய்ப்புகளை உருவாக்கக் கூடிய தொழில் எது என அலசிப் பார்த்தால், கதர் கிராமத் தொழில்கள் தான் முன்னோடியாக நிற்கும். அதனால்தான் காந்தியடிகளின் நிர்மாணத் திட்டங்களின் கீழ், "கதர் கிராமத் தொழில்கள்" ஒன்றாக அமைந்திருக்கிறது.

காந்தியடிகளின் பிறந்த நாளான அக்டோபர் 2ஆம் நாள்முதல்தீபாவளிவரையில் கதர் துணிகளுக்கு சிறப்புத் தள்ளுபடியுடன் விற்பனை செய்ய எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டுள்ளன.

புதுப்புது தினுசுகளில் கண்ணைக் கவரும் கதர் பட்டு சேலைகள், வேட்டிகள், துண்டுகள், போர்வைகள் மற்றும் தயாரித்த ஆடைகள் வாரிய அங்காடிகளில் ஏராளமாக பொது மக்களுக்காக வைக்கப்பட்டுள்ளன. இச்சமயத்தில் எல்லோரும் தங்கள் தேவைகளை கதர் அங்காடிகளில் சென்று வாங்கி இத்தொழிலில் ஈடுபட்டிருப்போர்க்கு ஆதரவு தருமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

**எஸ்.என். இராசேந்திரன்**
கைத்தறி, கதர் அமைச்சர்/
தலைவர், தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரியம்.



### வேண்டுகோள்

நம் நாடு விடுதலை பெற்றதும் அன்றைய சென்னை அரசு தேசபிதா அவர்களின் ஆசிகளோடு தனது நேரடிக் கட்டுப்பாட்டில் உற்பத்தி செய்து விற்பனை செய்யும் பெருந் திட்டம் ஒன்றைத் தொடங்கியது. இவ்வாறு தொடங்கப்பட்ட அரசுத் திட்டமானது, தற்போது தமிழ் நாடு கதர் கிராமத் தொழில் வாரியத்தால் செயற்படுத்தப்பட்டு வருகிறது.

ஏனைய மாநிலங்களில் அம்மாநில வாரியங்கள் முக்கியமாக கிராமத் தொழில்களை வளர்ப்பதிலேயே கவனம் செலுத்தும்போது தமிழ் நாடு வாரியம் கதர், கிராமத் தொழில்களின் வளர்ச்சியிலும் அவற்றை விரிவுபடுத்துவதிலும் அக்கறைகாட்டி வருகிறது. கதர்த்துணி உற்பத்தியைப் பொறுத்தமட்டில், இம்மாநிலம், 13.5 கோடி ரூபாய் மதிப்புள்ள துணிகளை உற்பத்தி செய்யும் அளவை எட்டி விட்டது. இதன் மூலம் நூற்போர் நெசவாளிகள், கைவினைஞர்கள் போன்ற பல்லாயிரவர்க்கு வேலை வாய்ப்பு அளித்துள்ளது. இவர்கள் தொடர்ந்து வேலை வாய்ப்பு பெறுவதும் இத்தொழில் விரிவடைவதும் பொதுமக்கள் இத்தொழிலுக்கு அளிக்கும் ஆக்கத்தையும் ஊக்கத்தையும் பொறுத்துள்ளது. கதரின் மேன்மையை மக்களிடையே பரப்பி வேலை வாய்ப்புச் சிக்கலைத் தீர்ப்பதில் அது எவ்வளவு தூரம் துணையாயுள்ளது என்பதை அவர்களுக்கு எடுத்துரைக்கவும் அதனை போற்றுவோர் மீண்டும் அதற்குத் தங்களை அர்ப்பனித்துக் கொள்ளவும் ஒவ்வோர் ஆண்டும் காந்தி ஜெயந்தி ஒரு நல்ல வாய்ப்பாக அமைகிறது.

காந்தி ஜெயந்தியின் போதும், தீபாவளியின் போதும் தமிழ் நாடு கதர் கிராமத் தொழில் வாரியம் தொடங்கியுள்ள விற்பனை இயக்கத்திற்கு வெற்றி வாகை சூடுமாறு தமிழ் நாட்டு மக்களை நான் கேட்டுக் கொள்கிறேன்.

**(ஏ.எம். தாமஸ்)**
தலைவர்,
**கதர் கிராமத்தொழில்கள் குழு,**



### வேண்டுகோள்

தமிழ்நாடு காதி, கிராமத் தொழில் வாரியம் அக்டோபர் 2, 1980-அன்று காதி விற்பனையைதொடங்கும் செய்தியறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன். காதி வளர்ச்சிக்கு பெருந்தொண்டாற்றிய மகாத்மா காந்தியின் நினைவு நாளான காந்தி ஜெயந்தி தினத்தினை காதி விற்பனையின் தொடக்க விழா நாளாக வாரியம் தேர்ந்தெடுத்திருப்பது மிகவும் பொருத்தமுடையதே. வாரியம் நிர்ணயித்துக் கொண்ட விற்பனை இலக்கை அடைய எடுத்துக் கொள்ளும் எல்லா முயற்சிகளும் வெற்றி பெறும் என்று பெரிதும் நம்புகிறேன்.

தொடக்க விழா சிறப்பாக நடந்தேற என் மனமுவந்த வாழ்த்துக்கள்.

**ச. இராமச்சந்திரன்**
ஆணையர் மற்றும்
அரசுச் செயலர்.
**தொழில்துறை.**

**சிறப்புத் தள்ளுபடி**
பருத்தி **25%** பட்டு **10%**



### தமிழ்நாடு கதர் கிராமத் தொழில்கள் வாரியம் கொள்கை விளக்கமும் திட்டங்களும்

கதர் கிராமத் தொழில் திட்டங்களை உருவாக்கி மேம்படுத்தும் பணியை விரைவு படுத்துவதற்காக, தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரியம் 1960ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் அமைக்கப்பட்டது. கிராமப்பகுதிகளில் கிடைக்கும் மூலப் பொருட்களைப் பயன்படுத்தி அங்கு வேலை வாய்ப்பு வசதிகளைப் பெருமளவில் உருவாக்குவது வாரியத்தில் தலையாய குறிக்கோள் ஆகும். கதர் கிராமத் தொழில்கள் மேம்பாட்டிற்கான திட்டங்களை வகுத்துச் செயல்படுத்துவதும் பணியாளர்களுக்குப் பயிற்சி அளிப்பதுமே இவ்வாரியத்தின் முக்கியப் பணிகளாகும்.

2. 1960-61-ல் கதர் உற்பத்தியும், விற்பனையையும் முறையே ரூ. 110.63 இலட்சமாகவும், ரூ. 102.12 இலட்சமாகவும் இருந்தன; அவை 1979-80-இல் முறையே ரூ. 519.49 இலட்சமாகவும், ரூ. 615.24 இல்ட்சமாகவும் உயர்ந்தன. கிராமத் தொழில் பொருட்களின் உற்பத்தியும் விற்பனையும் 1960-61-ல் முறையே ரூ. 277.81 இலட்சமாகவும், ரூ. 304.74 இலட்சமாகவும் இருந்தன. அவை 1979-80-இல் முறையே ரூ. 3273-39 இலட்சமாகவும், ரூ. 3546-28 இலட்சமாகவும் உயர்ந்தன. 1979-80-இல் வாரியம் கூடுதலாக 37,000 பேருக்கு வேலை வாய்ப்பளித்துள்ளது. மொத்தத்தில் இத்துறையின் கீழ் இதுவரை 3,93,592 பேருக்கு வேலை வாய்ப்பளிக்கப்பட்டுள்ளது. புதிய தொழில் பிரிவுகளைத் தொடங்கி கூட்டுறவுச் சங்கங்களுக்கும் தனிப்பட்ட கைவினைஞர்களுக்கும் கூடுதலாக நிதி உதவி அளிப்பதன் மூலம் உற்பத்தி 1980-81-ல் மேலும் உயரும் என எதிர்பார்க்கப்படுகிறது.



3. கதர் கிராமத் தொழில்கள் குழுவின் செயல் வரம்பிற்குள் வருகின்ற 22 கிராமத் தொழில்களில் தமிழ்நாடு கதர் கிராமத் தொழில்கள் வாரியம் நிதி உதவி வழங்குவதன் வாயிலாக தனது துறைத் தொழில் பிரிவுகள், தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாகவும் கைவினைஞர்கள் மூலமாகவும் கீழ்க் காணும் 14 கிராமத் தொழில்களைச் செயல்படுத்தி வருகிறது:—

1. பனைவெல்லம்
2. நாட்டுச்செக்கு எண்ணெய்
3. கைக்குத்தல் அரிசி (தானியங்கள், பயறு வகைகள் பதப்படுத்துவது உட்பட)
4. கிராமத் தோல் தொழில்
5. மட்பாண்டத் தொழில் (செங்கல், ஓடு)
6. சுண்ணாம்புக்கல், சுண்ணாம்புக் கால்வாய்
7. தேனீ வளர்த்தல்
8. தச்சுத் தொழில், கருமார் தொழில்
9. பழம் பதப்படுத்துதல், பாதுகாத்தல்
10. கையால் தயாரிக்கப்பட்ட காகிதம்
11. வெல்லம், கண்டசாரி சர்க்கரை
12. சமையலுக்குதவாத எண்ணெய், சோப்பு
13. நார்த் தொழில்
14. பிரம்பு மூங்கில்

4. மாநில அரசு ஏற்பளித்த கீழ்க்காணும் தொழில்களை, கதர் கிராமத் தொழில் குழுவிடமிருந்து நிதி உதவி பெறாமல் வாரியம் ஏற்று நடத்துகிறது :-

1. அகர்வத்தி
2. சீயக்காய்த்தூள்
3. பற்பொடி
4. நீலகிரித் தைலம்.



**கதர்**

துறைத் தொழில் பிரிவுகள், கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாக கதர் உற்பத்தி செய்யப்படுகிறது. இம்மாநிலத்தில் வாரியம் 328 கிராமத் துணைத் தொழில் நிலையங்களை நடத்தி வருகிறது. பருத்தி கதர்த் துணி விற்பனை மீது ஆண்டு முழுவதும் ரூபாய்க்கு 10 காசு தள்ளுபடியை கதர் கிராமத் தொழில் கமிஷன் அனுமதிக்கிறது. பண்டிகைக் காலத்தில் எல்லா வகைக் கதர்த் துணிகள் விற்பனை மீதும் சிறப்புத் தள்ளுபடி அளிக்கப்படுகிறது. கதர் விற்பனைக்கு ஊக்கம் அளிக்கும் பொருட்டு ஒவ்வோர் ஆண்டும் திரு. கே. காமராஜ், அறிஞர் அண்ணா, தந்தை பெரியார் ஆகியோரின் பிறந்த நாட்களைக் கொண்டாடும் வகையில் சிறப்புத் தள்ளுபடி வழங்க தமிழ்நாடு அரசு அனுமதித்துள்ளது. மேலும் காந்தி ஜெயந்தி தீபாவளிப் பண்டிகைக் காலத்தின்போது கதர் கமிஷனும், மாநில அரசும் சிறப்புத் தள்ளுபடி அளிக்கின்றன. இந்த ஆண்டு காந்தி ஜெயந்தி தீபாவளி பண்டிகைக் காலத்தில் ரூ. 525 இலட்சம் விற்பனை இலக்கை எட்ட வேண்டும் என வாரியம் நிச்சயித்துள்ளது.

கதர் கிராமத் தொழில் மூலம் தயாரிக்கப்படும் பொருட்கள், மாநிலம் முழுவதிலும் அமைந்துள்ள 500 விற்பனை நிலையங்கள் மூலமாக விற்பனை செய்யப்படுகின்றன. சென்ற ஆண்டில், குறளகம் கதர் கிராமத் தொழில் அங்காடி மட்டுமே ரூ. 5 கோடிக்கு மேலாகப் பொருட்களை விற்பனை செய்தது. தற்போதுபொருட்களுக்கு தள்ளுபடி வழங்கும் காலம் 1980-ஆம் ஆண்டு அக்டோபர் 2-ஆம் நாளிலிருந்து தொடங்கி 1980-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 5-ஆம் நாளுடன் முடிவடையும்.

**டாக்டர் சத்ரசால் சிங்,**
தலைமைச் செயல் அலுவலர்,
தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரியம்.



★ அனைத்திந்திய அண்ணா திமுக
கொள்கை பரப்புச் செயலாளர்

★ தமிழக சட்டமன்ற அரசு
கொறடா

★ புரட்சித்தலைவர் அவர்களின்
அன்புத் தம்பி



கொங்கு மண்டலத்தின் கொள்கைத் தங்கம்

சூறாவளிகள் சுழன்றடித்தபோதும் புரட்சித்தலைவரைப்



பிரியாது நின்ற சுத்த வீரன்

# திருப்பூர் மணிமாறன் M.L.A.

அவர்கள்

## இன்று (அக். 1) மேற்கொள்ளும் கீழ்த்திசை நாடுகள் சுற்றுப் பயணம் வெற்றிபெற உளங்கனிந்த வாழ்த்துக்கள்!

## செல்லும் இடமெல்லாம் தமிழக முதல்வர் புரட்சித்தலைவரின் புகழ் பரப்பி வென்று வருக!





**வி. கே. கலைமணி**

அனைத்திந்திய அண்ணா தி.மு.க. தொகுதி அமைப்பாளர்
வெள்ளகோவில்: பெரியார் மாவட்டம்

எம். வீரப்பன், கமலாமில், வெள்ளகோவில்

எம். கந்தசாமி, லாரி உரிமையாளர் சங்கசெயலாளர்

வெ. ந. முத்துகிருஷ்ணன், நகரபொருளாளர்

ஆர். என். பழனிசாமி, நகர எம்.ஜி.ஆர். மன்றம்.

இரா. நந்தகோபால், 6-வது வார்டு அமைப்பாளர்.

ஆர். குப்புசாமி, 5-வது வார்டு அமைப்பாளர்

பி. சின்னசாமி, எம். காம். மாணவர் பிரிவு

ஆர். குழந்தைவேலு, 4-வது வார்டு அமைப்பாளர்

கே எஸ். தண்டபாணி, 3வது வார்டு அமைப்பாளர், காடையூரான்வலசு.

எஸ். கே. தண்டபாணி, 2-வது வார்டு அமைப்பாளர், உப்புப்பாளையம்.

வி. டி. சுந்தரம், வேலகவுண்டன்பாளையம்

எம். சாமிமுத்து, நகர துணை அமைப்பாளர் வெள்ள கோயில்

இராமசாமி, 12வது வார்டு அமைப்பாளர், காட்டுப்பாளையம்.

பி. கருணாகரன், செம்மாண்டம்பாளையம்.

எஸ். குமாரசாமி, அ. புதூர்

பி. கந்தசாமி, பாப்பம்பாளையம்

பி. முத்து, சு. க. வலசு,

செல்லமுத்து, தென்னங்கரைப்பாளையம்.

செல்லக்கண்ணு, கரட்டுப்பாளையம்

செல்லமுத்து சரவண கவுண்டன்வலசு

கே. பெரியசாமி, ரெட்டிவலசு

என். பொன்னுசாமி, சிலம்பகவுண்டன் வலசு

எம். வி. பொன்னுசாமி, முத்தூர்

குழந்தசாமி, வேலூர்

ஆண்டிவேல், கன்னிவாடி

ஏ. ஆர். பழனிசாமி, வெள்ளவாவி புதூர்

பி. ரங்கசாமி, அண்ணா விசைத்தறி தொழிலாளர் சங்கம் வெள்ளக் கோவில்

டாக்டர் கருப்பசாமி, மூலனூர்

தாராபுரம் கூட்டுறவு நூற்பாலை அண்ணா தொழிற் சங்க தோழர்கள், குளத்து பாளையம்

மற்றும்

வெள்ளக்கோயில் தொகுதி கழக கிளைகள், எம். ஜி. ஆர். மன்றங்கள் தொழிற்சங்கங்கள், மாணவர் மகளிர் பிரிவினர்.